


நகரத்தார்

# இதழ்

ஆடி 1992

## கவியரசு கண்ணதாசனார் மலர்



கவியரசு கண்ணதாசனார்

## சமூக மாத இதழ்

ஆசிரியர்

சுப. செந்தமிழன்

இப்பாய்ந்தாள் துணை

ஓம்

தாய் திப்பாய்ந்தாளுக்கு வணக்கம்

தமிழ் அன்னைக்கு வணக்கம்

செய்யும் தொழிலே தெய்வம்

# கவியரசு கண்ணதாசன் மலர்

மலர் : 6 ஆடி - 1992 இதழ் : 2



ஆசிரியர் :

சுப. செந்தமிழன் B.A.,

துணை ஆசிரியர் :

இராசகுமாரி செந்தமிழன்

அலுவலகம் :

5, யானைக்காரச் சந்து

மீனாட்சியம்மன் கோவில் தெரு

மதுரை-625 001.

தமிழ் நாடே வாழ்க-எம்

தாய் நாடே வாழ்க

அமிழ்தாகிய இயலிசை கூத்தென்னும்

தமிழாகிய உயிர்தழையும் விழுமிய தமிழ்நாடே வாழ்க

புரட்சிக் கவிஞர்

பாரதிதாசனார்

# கவியரசு கண்ணதாசனார் வாழ்க்கை குறிப்பு



இயற்பெயர்—முத்தையா

புனைப் பெயர்கள் } காரைமுத்துப் புலவர்
பார்வதிநாதன்
வணங்காமுடி
முத்து.
கண்ணதாசன்

பிறந்த ஊர்—சிறுகூடல் பட்டி

பிள்ளை வந்த ஊர் } காரைக்குடி

குலதெய்வம் ...மலையரசி அம்மன்

வசனம் எழுதிய முதல் படம் ...ஆதித்தன் கனவு

முதல் பாடல் ...காலையில் குளிந்தெழுந்து என்று தொடங்கியது

முதல் படைப்பு ...எப்.சி.எப். என்ற தலைப்பில் திருமகள் இதழில் வந்த கதை

பணியாற்றிய முதல் இதழ் —சாண்டமாருதம்–ஆசிரியர்–1947

முதல் திரைப்பட பாடல் —''கலங்காதிருமனமே'' கன்னியின் காதலி

வசனம் எழுதிய படங்கள் —மதுரை வீரன், மகாதேவி, சுகம் எங்கே, இல்லற ஜோதி, நானே ராசா

தயாரித்த படங்கள் —சிவகங்கைச்சீமை, மாலையிட்ட மங்கை, இரத்த திலகம்

பெற்ற விருதுகள் —1970ல் தேதிய விருது
1971ல் தமிழக அரசின் சிறந்த கவிஞருக்குரிய விருது

கடைசி நூல் —அம்பிகையின் அழகு தரிசனம்

தி.மு.க.வில் —1949 செப்டம்பர் 17ல் தி.மு.க. வில் இணைந்தார்

மறைவு —17-10-81 அமெரிக்காவிலுள்ள மெக்சிகோ நகரத்தில் இயற்கை எய்தினார்

**கவியரசு கண்ணதாசன் வாழ்க்கையில் குறிப்பிடத்தக்க நிகழ்ச்சிகள்**

- 1950 ஆம் ஆண்டு பிப்ரவரி 9 ஆம் தேதி திருமணம் நடைபெற்றது.
- கலைவாணரால் உருவாக்கப்பட்ட 'பணம்' படத்தில் கவியரசு கண்ணதாசன் தி.மு.க. பிரசார பாடல் களை எழுதி தி.மு.க. கவிஞர் என புகழ் பெற்றார்.
- 1960-ல் தி.மு.க.வை விட்டு விலகினார். 1961-ல் தமிழ் தேசியக்கட்சியை ஈ.வெ.கி. சம்பத்தும், கவிஞரும் சேர்ந்து உருவாக்கினார்கள்.
- கவியரசு கண்ணதாசனின் நூல்கள்

அ) அர்த்தமுள்ள இந்து மதம்
ஆ) வனவாசம்
இ) நெஞ்சுக்கு நிம்மதி
ஈ) கேள்விகளும் கண்ணதாசன் பதில்களும்
உ) தலையங்கள்
ஊ) அபிராமி அந்தாதி
எ) சுகமான சிந்தனைகள்
ஏ) ஞானம் பிறந்த கதை
ஐ) தென்றல் வெண்பா 1000
ஒ) எனது சுயசரிதம்

# கவியரசு கண்ணதாசனார் பற்றி

## மதுரை சக்தி-சிவம் உரிமையாளர்

# RM. அண்ணாமலை செட்டியார்

அவர்கள்



காலையில் சாண்டோ M. M. A. சின்னப்பாத் தேவர் கவியரசு கண்ண தாசன் அவர்களிடம் பாட்டு எழுத பத்தாயிரம் கொடுத்தார்கள். அப் பொழுது அவரது உறவி-னர் கல்லூரிக்கு பணம் கட்ட வேண்டுமென்று கூறியவுடன் ரூ. இரண்-டாயிரத்தை உடனடியாக கொடுத்தார். அடுத்த 15 நிமிடத்தில் அவரது பையன் தனக்கு கல்லூரி கட்டணம் கட்ட வேண்டுமென்று கூறியவுடன் அதற்கு ரூ. 2000/- கொடுத்தார். அதற்கு அடுத்த 15 நிமிடத்தில் இன்னொருவர் தன் மகள் திருமணத்திற்கு உதவிகேட்டு வந்தார். அவருக்கு ரூ. ஆயிரம் கொடுத்தார். தேவர் கொடுத்த ரூபாய் பத்தாயிரத்தில் ¾ மணி நேரத்தில் ரூ. ஐயாயிரம் உடனடியாக தீர்ந்து விட்டது. தயாளகுணத்தில் தன்னிடம் உள்ள தொகையை எல்லாம் கொடுத்து விட்டு தன் செலவிற்கு கடன் வாங்கி செலவு செய்வார். எப்பொழுதும் தேவையுடன்தான் இருப்பார். அடுத்த நாள் பற்றி கவலைப்படமாட்டார், கேட்டால் தனக்கு இறைவன் கொடுப்பார் என்பார்.

# புதுமையான ஓவிய கலைஞர்

ஆய கலைகள் அறுபத்து நான்கு. ஓவியக் கலை அதில் ஒன்று என்றாலும் அதிலும் பலவகை. புதுமாதிரியான ஒட்டும் முறை ஓவியக் கலையினை மேற்கொண்டு பலரும் பாராட்டும் வகையில் கண்டனூரைச் சார்ந்த சொ. பழநிமலை தெய்வப் படங்களை, மற்றும் இயற்கைக் காட்சிகளை வண்ணவண்ணமாக அமைத்து வருகின்றார்.

இராமேஸ்வரத்தில் 50 ஆண்டுகளுக்கு மேலாக சதாவிர்த்தி அறநிலை (வடநாட்டு யாத்ரீகர்களுக்கு கோதுமை, மா, நெய், வாழைப்பழம், சர்க்கரைவள்ளிக் கிழங்கு) நடத்திவரும் கண்டனூர் சி. ராம. சொ. குடும்பத்தில் பிறந்தவர். மத்திய அரசுப் பணிகளில் பல துறைகளில் பணிபுரிந்து தற்பொழுது பத்திரிக்கை பதிவுத்துறை Assistant Registrar of News Paper ஆகப் பணிபுரிந்து வரும் திரு. சொக்கு சுப்பிரமணியம் அவர்களின் சகோதரர்.

கோயில்களில் திருவீதி உலா வரும் சுவாமி அலங்காரம் செய்வதில் திறமை உள்ளவர். ஓவியக் கலை ஒட்டும் முறை படம் தயாரிப்பதிலும், அலங்காரம் செய்வதிலும் அவைகளில் ஏற்பட்ட ஈடுபாட்டு ஆர்வமே குரு. ஆர்வத்தின் காரணம் படிப்படியாக திறமையை வளர்த்து மேலும்மேலும் புதுமையாக, சிறப்பாகச் செய்து வருகின்றார்.

ரவிவர்மா வரைந்த ஓவியத்தின் ஆப்செட் படங்களின் மேல் மஸ்லீன் துணிகளை சுருக்கத்துடன் தைத்து அதன்மீது ஜமிக்கி, ஜரிகை, ஜிகினா வேலைகள் செய்துள்ள படங்கள் நம்மவர் வீடுகளில் முகப்பில், ஹால் வீடுகளில் காணலாம். ஒட்டும் ஓவிய கலைஞர் பழநிமலை தயாரிக்கும் படம் அவ்வாறில்லாமல் தயாரிப்

பதற்கு உள்ள படத்தை அவுட் லைனாக வரைந்து பாகங்களை தனித்தனியாக வெட்டி கார்டு கனமுள்ள அட்டையில் ஒட்டி வடிவத்திற்கு ஏற்ற கலர் துணிகளை தகுந்த அளவு வெட்டி ஒட்டி வைத்துக்கொள்கின்றார். கனமான Hard Board பலகையில் படத்திற்கு ஏற்ற டார்க் கலரில் துணியை ஒட்டிக்கொள்கின்றார். அதன் மீது ஏற்கனவே அட்டையில் ஒட்டிவைத்துள்ள பாகங் களை வரிசைப்படி ஒட்டி அதன்பிறகு ஜரிகை, ஜிமிக்கி வேலைப்பாட்டினைச் செய்கின்றார். கண், மூக்கு, விரல் ரேகை அமைப்புக்களை பெயிண்ட், பிரஷ் கொண்டு செய்யாமல் கறுப்பு நூலினால் ஒட்டி படத்தை சிறப் பாகச் செய்து முடிக்கின்றார்.

விநாயகர், முருகன், மகாலெட்சுமி, ஆலிலைக் கண்ணன், ராஜராஜேஸ்வரி போன்ற அனைத்து தெய்வப் படங்கள், மற்றும் வேளாங்கண்ணி மாதா, மக்கா-மதீனா போன்ற எல்லாப் படங்களையும் செய்து வருகின்றார்.

இவருடைய திறமையைப் பாராட்டி கண்டனூர் குடமுழுக்கு நன்னீராட்டு விழாவில் மத்திய அமைச்சர் திரு. ப. சிதம்பரம், திருமுருக கிருபானந்தவாரியார் சுவாமிகள் முன்னிலையில் பொன்னாடை அணிவித்து பெருமை செய்தார்கள்.

பழநிமலை நடிப்பாற்றலிலும் சிறந்தவர். காவிரிப் பூம்பட்டினம் பட்டினத்தார் திருவிழாவில் பேரனாக, மருத்துவ உதவியாளராக பல ஆண்டுகளாக நடித்து வருகின்றார். சிறந்த பொதுநலத் தொண்டர்.

பேட்டி: பலவான்குடி வள்ளியப்பன்

---

★ இதயதுடிப்பு அதிகமாக இருந்தால் தினசரி
காலையில் திராசை பழரசம் சாப்பிடுங்கள்

★ தினமும் ஒரு டம்ளர் தக்காளிசாறு குடியுங்கள்
தொண்டை புண்ணுக்கு நல்லது

## காவிரிப்பூம்பட்டினம் - திருவெண்காடராகிய பட்டினத்தடிகள் திருவிழா

காவிரிப்பூம்பட்டினத்தில் பட்டினத்தடிகள் திருவிழா ஆங்கிரச ஆண்டு ஆடி-மீ 18உ (2-8-92) முதல் ஆடி-மீ 29உ (13-8-92) வரை சிறப்பாக நடைபெற உள்ளது.

**நிகழ்ச்சிகள்:**

2-8-92 ஞாயிறு:-
இரவு - அனுஞ்சை, விக்னேசுவர பூசை.
திருவெண்டார் திரு அவதாரம்.

3-8-92 திங்கள்:-
காலை - திருவெண்காடர் திருவெண்காட்டிற்கு எழுந்தருளுதல். திருவெண்காடர் சிவதீட்சை பெறுதல்.

4-8-92 செவ்வாய்:-
திருவெண்காடர் முக்குள நீராடுதல்.
இரவு - திருவெண்காடர் திருமணம். முத்துப் பல்லக்கில் வலம் வருதல்.

5-8-92 புதன்:-
காலை - மருதவாணர் குழந்தையாய் வெள்ளி விமானத்தில் எழுந்தருளுதல்.
இரவு - வெள்ளி கட்டிலில் குழந்தையை தாலாட்டல்.

6-8-92 வியாழன்:-
மருதவாணர் வித்தியாப்பிசம்
கடற்கரை செல்லுதல் - துறவியாகுதல்.

7-8-92 வெள்ளி:-
பட்டினத்தடிகள் பிட்சைக்கெழுந்தருளுதல்.
இரவு - நஞ்சு கலந்த அப்பம் அளித்தலும், வீடு தீப்பற்றுதலுல்.
அன்று மாலை திருவிளக்கு பூசை.

8-8-92 சனி:-

ஞானகலாம்பிகை பரிபூரணமடைதல்.

இரவு - முத்து சிவிகையில் மயானம் சேர்தல்.

சுவாமியும், அம்மனும் இடபாடுராய் எழுந்தருளி

மோட்சம் கொடுத்தல்.

9-8-92 ஞாயிறு:-

திருவாரூர் பிள்ளையைப் பிழைப்பித்தல்.

இரவு - பல்லவனீச்சுரத்தில் கழுமரம் எரித்தல்.

10-8-92 திங்கள்:-

பத்திரகிரியாரும், நாயடியாளும்

அடிகள் அருளால் மோட்சமடைதல்.

தங்க பேய்க் கரும்பு தாங்குதல்,

11-8-92 செவ்வாய்:-

காலை - பட்டினத்தடிகள் குருபூசை.

இரவு - பட்டினத்தடிகள் பஞ்சமூர்த்திகள்

திருவீதி உலா.

12-8-92 புதன்:-

பஞ்சமூர்த்திகள், பட்டினத்தடிகள் கடற்கரைக்கு

எழுந்தருளுதல்.

13-8-92 வியாழன்:-

ருத்ராபிஷேகமும், விடையாற்றியும்.

# இனி ஒரு ஆரம்பம்

தஞ்சை புழ. வள்ளியப்பன்

அதிகாலை; சூரியன் மெல்ல வெண் கதிர்களால் உதயமாக அந்த கிராமம் சோம்பலாய் விழித்துக் கொண்டது. பச்சை பசேலென்ற செடிகளும், கொடிகளும் காற்றில் சலசலக்க பறவைகள் கீதம் இசைத்தன. தூரத்தில் ஒரு பேருந்து தன் இரைச்சலை அந்த அமைதியான கிராமத்துக்குத் தராமல் மெல்ல ஊர்ந்து சென்றது.

ஊரின் மையப் பகுதியில் அந்தக் கோயில் பிரமாண்டமாய் எழுந்து நிற்க, சுற்றிலும் வீடுகள் சூழ்ந்து அழகாய் அமைந்திருந்தது. கோயிலின் அர்ச்சகர் ஸ்லோகம் பாடிக் கொண்டே வர 'கண்ணை' விழித்துக் கொண்டார்.

''அடடே, கண்ணம்மை ஆச்சியா, வாங்க என்ன அதிகாலையிலேயே கோயில் பக்கம்'' அர்ச்சகர் விசாரிக்க, எதிரே வந்த கண்ணம்மை ஆச்சிக்கு நாற்பதுக்குள் வயதிருக்கும். நல்ல மங்களகரமான முகம், முகத்துக்கேற்ற குங்குமப் பொட்டு, பட்டுச் சேலை சரசரக்க வைரத்தோடும், மூக்குத்தியும் மினுமினுக்க ஆச்சி நடந்து வந்தால் ஊர் நின்று பார்க்கும். கூடவே வணங்கக் கை எடுக்கும். அப்படி ஒரு தோற்றம். ஆச்சி மெல்ல அடி வைத்து நடந்தால் எதிரே வருவோர் ஒரு ஓரம் சென்று வணக்கம் சொல்வார்கள். ஆச்சியின் மனசும், கையும் ரொம்பவும் தாராளம். கேட்டால் மறுத்து சொல்ல மாட்டாள் ஆச்சி. பின் ஆச்சியின் மதிப்புக்கு கேட்கவா வேண்டும்.

''ஒண்ணுமில்ல சாமி, எம் பொண்ணுக்கு ஒரு நல்ல வரன் குதிர்ந்திருக்கு. மாப்பிள்ளை பையன் டாக்டரா இருக்கான். நல்ல இடம். பொண்ணோட ஜாதகத்தை கேட்கறாக. அதான் சாமி பாதத்துல வெச்சி ஒரு அர்ச்சனை பண்ணிக் குடுத்திங்கின்னா நம்பிக்கையோடு ஜாதகத்த குடுத்திடுவேன்'', கண்ணம்மை ஆச்சி சொல்ல,

''அதுக்கென்ன ஆச்சி, பேஷா செய்துடுவோம்'', சொல்லிய அர்ச்சகர் பவ்யமாக ஜாதகத்தை வாங்கி சுவாமி பாதத்தில் வைத்து அர்ச்சனையை துவங்கினார். கூடவே அவர் மனத்தில் ஆச்சி தரப் போகும் அந்தக் கணிசமான தொகையைப் பற்றின குளிர்கால கனவுகளோடு.

மாசமான நாலாயிரம் சம்பளம் வாங்குகிறான். பாத்து நல்ல எடமா கொண்டு வாங்க''.

''நீங்க சொல்லனுமா எனக்குத் தெரியாதா என்ன, ஜமாய் சுடலாம், கவலையே படாதீங்க ''தரகர் செல்ல கண்ணம்மை ஆச்சி மெல்லச் சாய்ந்தாள்.

''பொண்ணு பேரு சரசுவதி, பெயருக்கு ஏத்த குணம். அமெரிக்காவுல படிச்சு வளந்த பொண்ணு, நல்ல அழகா இருப்பா'' மறுநாள் தரகர் சொல்ல இடைமறித்த கண்ணம்மை ஆச்சி,

''என்னது என்னது அமெரிக்காவுல படிச்ச பொண்ணா'' என்றாள்.

''ஆமா ஆச்சி பொண்ணு வளர்ந்தது, படிச்சது எல்லாம் அமெரிக்கா தானாம். நம்ம பக்கம் இப்பத் தான் வர்றாங்க. இது தான் பொண்ணோட படம். நல்ல இடம் ஆச்சி மனசு வெச்சா உடனே முடிச்சுப்புடுவேன்''.

பார்த்தவுடன் கண்ணமைக்குப் பெண்ணப் பிடித்துவிட, சரி தரகர் ஐயா, இந்த இடத்தையே முடிச்சுடுங்க ஆனா ஒரு கண்டிஷன், கல்யாணம் ஆறு மாசம் கழிச்சுத்தான்'' ஆச்சி சொல்ல காரணம் புரியாமல் தரகர் தலை அசைத்தார்.

அடுத்த நாள் மாலை,

''இதப்பாரு கண்ணம்மை சாய்ந்தரம் ஆச்சுன்னா ஒரு பைய‌த் தூக்கிட்டு கெளம்பிடுறே, ராத்திரிக்குத் தான் திரும்புறே, எங்கே போறே, வர்றேன்னு தெரியலையே'', நாகப்பன் கேட்க, சிரித்தபடியே கிளம்பினாள் கண்ணம்மை ஆச்சி.

கண்ணம்மை வரப் போகும் தன் அமெரிக்க மருமகளுக்காக தினம் அரிச்சுவடி படிக்கப் போவது அவருக்குத் தெரிந்திருக்க நியாயமில்லை.

---

<u>மதுரை</u> மதுரை அங்காளஈசுவரி அம்மன் திருக்கோவில் 32வது ஆண்டு பொங்கல் விழாவையொட்டி 24-6-92 அன்று கவிதைத் தென்றல் திருப்புவனம் கரு. கருப்பையா தலைமையில் மாபெரும் சிந்தனைப் பட்டி மன்றம் சிறப்பாக நடைபெற்றது.

---

''இந்தாங்க தரகரே எம் பொண்ணோட ஜாதகம், கொண்டு போய் குடுத்திட்டு நல்ல செய்தியோடு வாங்க'' ஆச்சி கொடுக்க மரியாதையுடன் வாங்கிய தரகர், ''உங்க மனசுக்கு எல்லாம் நல்லாவே நடக்கும்,'' என்றபடியே வெளியேறினார்.

''என்ன கண்ணம்ம கல்யாண வேல ஆரம்பிச்சாச்சு போலேருக்கு'' நாகப்பன் மெல்ல சீண்டிப் பார்க்க,

''ஆமா, உங்களுக்கென்ன முகப்புத்திண்ணையில குத்துக்கல்லாட்டமா உக்காந்துகிட்டு பேப்பர் படிச்சுக்கிட்டு இருப்பீக யாரு வேல பாக்குறது''

''கண்ணம்ம நீ ஒருத்தி பாத்தா பத்தாதா, நா வேற குழப்பனுமா, ஆனாலும் படிக்காட்டியும் கூட உனக்கு தெறமை சாஸ்தி தான்'' மேலும் அவர் சீண்ட,

''ஆமாமா, அம்மா படிக்காட்டிக்கூட அவங்க மதிப்பே தனி தான். எம்மா எனக்கு டாக்டர் மாப்பிள்ள பாக்குறியே, உனக்கு எழுதப் படிக்க தெரியலேன்னு தெரிஞ்சா அவரு என்ன நெனச்சுக்குவாரு'' உமா தன் அப்பாவுடன் சேர்ந்து சீண்ட,

''சரி தான் நிறுத்துடி, என்னமோ படிச்சுட்டாளுகளாம் பெரிய படிப்பு, படிக்காததுனால நான் எதுலடி குறைச்சலாய் போய்ட்டேன். கட்டுச் செட்டா வாழ்ந்து காட்டலயா, குடும்பத்த முன்னுக்கு கொண்டு வரலயா, உன்னையும், உங்கண்ணன்களையும் நல்லாத் தான் படிக்கவைக்கலயா, வீடுகட்டலயா, சொத்துச்சேக்கலயா, சொல்லுடி'' கண்ணம்மை வரிந்துக் கட்டிக் கொண்டு வர,

''அம்மா உமா இனி உங்கம்மாட்ட பேச முடியாது, வா ஓடிப்போயிடலாம்'' நாகப்பன் வேகமாகச் செல்ல கண்ணம்மை முகத்தை ஒரு வெட்டு வெட்டித் திரும்பினாள்.

''ஆச்சி ஜாதகம் பொருந்திப் போச்சு அடுத்த மாசமே கல்யாணம் வெச்சுக்கச் சொல்றாக'', தரகர் சொல்ல கண்ணம்மை மளமளவென்று வேலையை ஆரம்பித்தாள்.

''ஒரு வழியாக பொண்ணு கல்யாணத்த முடிச்சுட்டேன். தரகர் ஐயா, எம் பையன் இப்பத் தான் கல்யாணத்துக்குன்னு ஒரு மாசம் லீவுல வந்திருக்கான். அவனுக்கும் சீக்கிரமா ஒரு பொண்ணு பாத்து உடனே கல்யாணத்த முடிச்சுப்புடனும். அவனப் பத்தி தான் உங்களுக்குத் தெரியுமே. இன்ஜினியரா இருக்கான்.

## பரங்குன்றத்துக்குப் பால்குடங்களும், காவடிகளும்

மதுரை நகரத்தார் சங்கத்தின் சார்பில் பத்தாவது ஆண்டாக வருகிற ஆவணி-மீ 5உ (21-8-92) வெள்ளிக் கிழமை காலை 8 மணிக்கு மதுரை, வடக்கு மாசி வீதி, 397-நிர். கட்டிடத்தில் அமைந்துள்ள தருமபுரம் ஆதீன மடத்திலிருந்து பால் குடங்களும், காவடிகளும் எடுத்துச் சென்று 10 மணியளவில் திருப்பரங்குன்றம் அருள்மிகு சுப்பிரமணிய சுவாமிக்குச் செலுத்தப் பெறும் என்றும் அதனையொட்டி எல்லா நிகழ்ச்சிகளிலும் நகரத்தார் பெருமக்கள் கலந்துகொண்டு சிறப்பிக்குமாறும் மதுரை நகரத்தார்சங்கத்தின் செயலர் கேட்டுக்கொண்டுள்ளனர்.

**நிகழ்ச்சி விபரம்:**

ஆவணி-மீ 4உ (20-8-92) வியாழக்கிழமை

மாலை 4 மணிக்கு:

தேனீர் – காவடி கட்டுதல் – தொடர்ந்து பக்திப் பாடல்கள் பாடுதல்.

இரவு 8 மணிக்கு: வேல் அபிஷேகம், தீபாராதனை.

ஆவணி-மீ 5உ (21-8-92) வெள்ளிக்கிழமை

காலை 5-30 மணிக்கு: பால்குடங்கள் கட்டுதல்.

காலை 7-00 மணிக்கு:

பால்குடங்கள், காவடிகளுடன் திருப்பரங்குன்றத்திற்குப் பக்தர்கள் புறப்படுதல்.

காலை 10-00 மணிக்கு:

காவடிகள், பால்குடங்கள் செலுத்துதல்.

பகல் 12-00 மணிக்கு:

திருப்பரங்குன்றம் நகர விடுதியில் மஹேஸ்வர பூஜை.

## பெரியார் மொழிகள்

**—கவியரசு கண்ணதாசன்**

---

★ ஒழுக்கமாக சம்பாதித்துப் பணக்காரனானவனும் குறைவு. உண்மையைப் பேசிப் பதவிக்கு வந்தவனும் குறைவு.

★ சிலநேரங்களில் புத்தி வெற்றி பெறுகின்றது. பல நேரங்களில் வெற்றியே புத்தியாகி விடுகின்றது.

★ சட்டத்தையும், ஒழுங்கையும் யாரோ குலைப்பதாகச் சொல்லப்படுவதை நான் மறுக்கின்றேன். சட்டம் தான் ஒழுங்கைக் குலைத்துக் கொண்டிருக்கின்றது.

★ கிடைக்கக் கூடாதவனுக்கு பதவி கிடைத்துவிட்டால் அவனே தெய்வமாகி விட்டதாக நினைக்கின்றான்.

★ வாழ வேண்டும் என்று நினைக்கின்றவனுக்கு என்ன வேண்டும்? எந்த விமர்சனத்தையும் தாக்கி எறிய வேண்டும்.

★ கேட்கும் போது சிரிப்பு வர வேண்டும்; சிந்தித்துப் பார்த்தால் அழுகை வரவேண்டும். அதுதான் நல்ல நகைச்சுவை.

★ அரண்மனை யாயினும் அழைக்காமல் போகாதே.

★ எப்போதும் மனம் ஒரே நிலையில் இருப்பதற்கு பெயர் தான் நிம்மதி.

---

**அன்புள்ளவன் தெய்வம்**

**கருணையுள்ளவன் தெய்வம்**

**கற்புள்ளவன் தெய்வம்**

---

கொண்டிருக்கிறது. மாவீரன் சிவாஜிகூட, இளமையில் தாயும், குருவும் சொன்ன இதிகாசக்கதைகளைக் கேட்டு, பின்பற்றியதால்தான், ''சத்ரபதி சிவாஜி'' எனப் போற்றப்பட்டார். இவ்வாறு ஒருவரை முன்னோடியாக, வழிகாட்டியாகக்கொண்டு, அவரிடம் உள்ள நல்ல பண்புகளைப் ''பின்பற்றுதல்'', நல்ல மனிதனை உருவாக்கும் என்பது என்னுடைய உறுதியான கருத்தாகும். இப்பண்பின் நிறை, குறைகளை மற்றவர்களும் எடுத்துச் சொல்லலாமே?

—இராயவரம்—திருமதி மீனாள் பெரியணன்
விஸ்வநாதபுரம்

# “எண்ணக்குவியல்”

## ‘‘பின்பற்றுதல்’’ தவறா ?

‘‘மன்னர் பின்னோர்கள்’’, எனப் போற்றப்படும் நம் நகரத்தாரிடம் நல்ல பண்புகள் பல இருந்தாலும், ‘‘ஒற்றுமை’’ என்பது வர வரக் குறைந்துகொண்டே வருகிறது. ஐந்து வயதில் அண்ணன் தம்பியராய் இருந்தவர்கள் பத்து வயதில் பங்காளியாகி விடுகின்றனர். யாதும் ஊரே, யாவரும் கேளிர் என்று பண் பாடிய இனத்தில் இன்று, அண்ணன், தம்பி, அக்காள், தங்கை, தாய், மகன் என்று உறவுமுறைச் சண்டைகள் பல்கிப் பெருகி வருகின்றன. இம்முறை நீடிப்பது நம் இனத்துக்கு நல்லதல்ல. குற்றம் பார்க்கில் சுற்றம் இல்லை; கோடி கொடுத்தும் குடிப்பிறந்தார் தம்மோடு கூடுவதே கோடி பெறும்; என்பதெல்லாம் நாம் அறிந்ததே. நம்மில் ஒற்றுமை வளர்ந்தால், நம் இனம் வாழையடி வாழையென செழித்து வளரும் என்பதில் ஐயமில்லை.

அக்கம்பக்கத்தில் உள்ள அன்பான, பாசமுள்ள குடும்பங்களைப் பார்த்து, நாமும் அவர்களைப்போல் வாழப் பழக வேண்டும். கீழ்ஜாதியினர் என வெறுக்கும் மக்களிடம், அற்புதமான நல்ல குணங்கள், பண்புகள் நிலவி வருவது கண்கூடு. ஆனால், இன்றைய தலைமுறையினரோ, ‘‘பின்பற்றுதல்’’ என்பதே தவறானது. யாரையும் ‘‘காப்பி’’ அடிக்காமல் என் தனித்தன்மைப் படிதான் நடப்பேன் என்று, தன்மானக் குரல் கொடுக்கின்றனர். அதற்கு ஆதரவாகப் பல காரணங்களை நமக்குக் கூறுகின்றனர்.

அரிச்சந்திரனையும், சிரவணனையும் நாடக வடிவில் பார்த்துப் பின்பற்றியதால்தான், நமக்கு ஒரு மகாத்மா கிடைத்தார். அந்த மகாத்மாவை, அனைவரும் பின்பற்றாவிட்டாலும், ஆயிரக்கணக்கானோர் பின்பற்றுவதால்தான், காந்தியம் இன்றும் வாழ்ந்து

**விருச்சிகம்:**

சொத்துக்கள் சம்பந்தப்பட்ட பிரச்னை — கூட்டுத் தொழில் பார்ப்பவர்கள் பிரிய நேரிடும். கோர்ட், வழக்கு போன்ற விஷயங்களில் முன்யோசனையுடன் செயல்படுவது நலம்—பொருள் விரயம் உண்டு.

**தனுசு:**

உடல்நிலையில் கவனம் தேவை - மாத பிற்பகுதியில் எதிர்பார்த்த காரிய ஜெயம். வாஹனம் புதுப்பித்தல், காலிமனைகள் வாங்கும் யோகம் உண்டு — பிரயாணத்தினால் ஆதாயம்.

**மகரம்:**

ஜென்ம சனி — உடல்நிலையில் கவனம் தேவை — குடும்பத்தில் மனக் கவலைகள் - மாத பிற்பகுதியில் ஓரளவு நலம் ஏற்படும். சிலருக்கு இடப்பெயர்ச்சி - குழந்தைகள் சம்பந்தப்பட்ட மனக் கவலை ஏற்படும்.

**கும்பம்:**

அரசாங்க அனுகூலம் - எதிர்பார்த்த காரிய ஜெயம் — கூட்டுந் தொழில் பார்ப்பவர்கள் முன்னேற்றமடைவார்கள் — பிரயாணத்தினால் ஆதாயம் உண்டு - சிலருக்கு இடப் பெயற்சி போன்றவை ஏற்படலாம்.

**மீனம்:**

உத்யோக உயர்வு - பொருள் சேர்க்கை - நண்பர்கள் மூலம் எதிர் பார்த்த உதவி கிடைத்தல் - வாஹனம் வாங்கும் யோகம் உண்டு - மனைவியின் உடல் நிலையில் கவனம் தேவை - பிரயாணங்கள் தவிர்ப்பது நலம்.

-சுபம்-

---



---

★ அழகு உலகத்திலுள்ள எல்லா சிபாரிசுக் கடிதங்களையும் விட மேலானது

# ஆரூடம்

**P. சங்கர், சின்னக்கடைத் தெரு, தெற்குவாசல், மதுரை.**

**17–8–92 முதல் 16–9–92 வரை**

**மேஷம்:**

எதிலும் காரிய ஜெயம். பிரயாணத்தினால் ஆதாயம். குடும்பத்தில் சுப செய்திகள். திடீர் தன பிராப்தி. வீடு, நிலம் வாங்கும் யோகம் உள்ளது.

**ரிஷபம்:**

குடும்பத்தில் குழப்பம். கொடுக்கல் வாங்கல் கவனம் தேவை. கூட்டுத் தொழில் பார்ப்பவர்கள் பிரிய வாய்ப்பு உண்டு. உடல் நிலையில் சிலருக்கு ஆப்ரேஷன் போன்றவை ஏற்படலாம். செவ்வாய் திசை, ராகு திசை நடப்பவர்கள் பரிகாரம் செய்து கொள்ளவும்.

**மிதுனம்:**

சுப விரயச் செலவுகள், இடமாற்றம், தொழிலாளர் மூலம் மனக் கசப்பு. அரசாங்க சம்பந்தப்பட்ட சிக்கல். சனி திசை நடப்பவர்கள் பரிகாரம் செய்து கொள்ளவும்.

**கடகம்:**

எதிலும் காரிய ஜெயம். உறவினர் மூலம் எதிர்பார்த்த காரிய ஜெயம். சொத்துக்கள் வாங்குதல், மாற்றி அமைத்தல் போன்றவை ஏற்படும். புதிய முயற்சிகள் வெற்றி தரும். குடும்பத்தில் ஆடை, ஆபரண சேர்க்கை உண்டு.

**சிம்மம்:**

உத்யோக உயர்வு. பிரயாணத்தினால் ஆதாயம். குடும்பத்தில் மாதபிற்பகுதியில் விரயச் செலவுகள். கொடுக்கல் வாங்கலில் நிதானம் தேவை. பழைய வாகனங்கள் புதுப்பித்தல்.

**கன்னி:**

எதிலும் நிதானம் தேவை — உத்யோகத்தில் மனக் கஷ்டம் — கொடுக்கல் வாங்கலில் பகை ஏற்படும் – பிரயாணங்கள் தவிர்க்கவும் – எதிர்பாராத இடப் பிரச்னை, அரசாங்கத் தொல்லை ஏற்படும்.

**துலாம்:**

பொருளாதார சிக்கல் – வியாபாரிகள் திடீர் நஷ்டமடைவார்கள் – சிலருக்கு இடப்பெயர்ச்சி ஏற்படும். உடல் நிலையில் கவனம் தேவை. சுக்ர திசைநடப்பவர்கள் பரிகாரம் செய்து கொள்ளவும்.

## விரையாச்சிலை

**அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி கோவில் திருக்குட நன்னீராட்டு விழா 30-8-92**

**ஆவணி-14 ஞாயிற்றுக்கிழமை** காலை 6 மணி முதல் 7 மணிக்குள் சிறப்பாக நடைபெறவுள்ளது.

---

## பலவான்குடி

நகரத்தாருக்கு சொந்தமான மீனாட்சி சுந்தரேசுவரர் திருக்கோயில் கோபுரங்கள் சீர் செய்து வர்ணம் வைக்கப்பெற்றும் ஆலயம் புதுப்பிக்கப்பட்டும் ஆவணி 17உ புதன் கிழமையன்று (மீனாட்சி சுந்தரேசுவரர் திருக்கோயில்) திருக்குட நன்னீராட்டு விழா சிறப்பாக நடைபெறுகின்றது.

---

## பாகனேரி

தொழிலதிபரும், சிவநெறிச்செல்வருமான பாகனேரி ராம. முத்துப்பழனியப்ப செட்டியார் பேத்தியும், M. கண்ணப்ப செட்டியார் செல்வியுமான மங்கையர்கரசி B.A., க்கும் பட்டமங்கலம் S.P. கரும்புநாதன் செட்டியார் செல்வருமான ரங்கநாதன் B.E., (MS USA) க்கும் பாகனேரியில் 2-7-92 அன்று திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

---

## திரை உலகில் நம்மவர்கள்

**வா வா வசந்தமே** படத்தயாரிப்பாளர் காரைக்குடி பழ. கருப்பையா அவர்கள். அவரது செல்வர் இளங்கோ அந்தப்படத்தில் முக்கிய வேடத்தில் நடித்துள்ளார்.

**வானமே எல்லை** வானமே எல்லை படத்தில் நடித்துள்ள விசாலி அவர்கள் கவியரசு கண்ணதாசன் — வள்ளியம்மை ஆச்சி அவர்களின் செல்வியாவார்.

**கலியுக காலம்** கலியுக காலம் படத்தில் பஞ்சுஅருணாசலம் செல்வர் சுப்பிரமணியன் நடித்துள்ளார்.

---

பணம் போகும்போது அதற்கு நூறு கால்கள்
வரும்போது இரண்டே கால்கள்

---

## நமது செய்திகள்

### கண்டரமாணிக்கம்

கண்டரமாணிக்கத்தில் 9–7–92 அன்று கண்டரமாணிக்கம் நகரத்தார் கோவிலான அருள்மிகு மாணிக்க நாச்சியம்மன் கோவில் திருக்குட நன்னீராட்டு விழா சிறப்பாக நடைபெற்றது. அதே நாளில் கண்டரமாணிக்கம் பெரியநாயகி அம்மன் சமேத கைலாச சுவாமி கோவில், சுப்பிரமணிய சுவாமி கோவில், அழகிய கண்ட விநாயகர், ஆதீன மிளகிஅய்யனார் கோவில், முத்து முனியைய்யா கோவில்களுக்கும் குடமுழுக்கு விழா சிறப்பாக நடைபெற்றது.

---

### பதிப்புச் செம்மல் ச. மெய்யப்பனார் 59ம் ஆண்டு நிறைவு விழா.

பதிப்புச்செம்மல் ச. மெய்யப்பனார் 59ம் ஆண்டு நிறைவுவிழா ஆனித்திங்கள் 14ஆம் நாள் 28–6–92 ஞாயிற்றுக் கிழமையன்று திருக்கடவூர் அபிராமி அம்மை உடனாகிய அமிர்த கடேசுவரர் திருமுன் சிறப்பாக நடைபெற்றது.

---

### திருப்பரங்குன்றத்துக்கு பால் குடங்கள் & காவடிகள்

மதுரை நகரத்தார் சங்கத்தின் சார்பாக 21-8-92 கார்த்திகை அன்று திருப்பரங்குன்றத்துக்கு பால் குடங்களும், காவடிகளும் எடுக்க உள்ளனர். விருப்பம் உள்ளவர்கள் நகரத்தார் சங்கம், சரவணா தங்கும் விடுதி, வடக்குச்சித்திரை வீதி, மதுரை–1 என்ற முகவரியுடன் தொடர்பு கொள்க.

---

### தஞ்சாவூர்

தஞ்சாவூர் கீழவாசல் பாம்பாட்டி தெருவில் அமைந்துள்ள அருள்மிகு சிந்தாமணி விநாயகர் கோவில் திருக்குட நன்னீராட்டு விழா 10–6–92 அன்று மிகச் சிறப்பாக நடைபெற்றது.

---

### கோட்டையூர்

அந்நாள் புத்தகங்கள் முதல் இந்நாள் புத்தகங்களை வரை சேகரித்து, பாதுகாத்து, நமது இனத்திற்கு பெருமை சேர்த்த கோட்டையூர் ரோஜா முத்தையா செட்டியார் அவர்கள் தமது 66 வயதில் 4–6–92 அன்று காலமானார்கள். அவர் சேகரித்த புத்தகங்கள் மூலம் பெருமை பெறுகின்றார்.

---

## குடமுழுக்கு நன்னீராட்டு விழா

## நாசிக்-பஞ்சவடி அருள்மிகு கார்த்திக் சுவாமி என்ற தண்டாயுதபாணி சுவாமி திருக்கோவில் அஷ்ட பந்தன மகா கும்பாபிசேக விழா

நாட்டுக்கோட்டை நகரத்தார்களுக்குச் சொந்தமான நாசிக்-பஞ்சவடி அருள்மிகு கார்த்திக் சுவாமி என்ற தண்டாயுதபாணி சுவாமி திருக்கோவில் திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா பம்பாய் வாழ் நாட்டுக் கோட்டை நகரத்தார்கள் ஒத்துழைப்புடன் நிகழும் மங்களகரமான ஆங்கிரஸ ஆண்டு ஆவணித் திங்கள் 24-ம் நாள் (9-9-'92) புதன்கிழமை காலை 6-15க்கு மேல் 7-15 மணிக்குள் திருக்குட நன்னீராட்டுப் பெரு விழா நடைபெற உள்ளது.

இங்ஙனம்

ஸ்ரீ காசி நாட்டுக்கோட்டை நகரச் சத்திரம்
மேலாண்மைக் கழகம்.

**குடமுழுக்கு நன்னீராட்டு விழா**
**நாசிக்-பஞ்சவடி அருள்மிகு கார்த்திக் சுவாமி என்ற**
**தண்டாயுதபாணி சுவாமி திருக்கோவில் அஷ்ட பந்தன**
**மகா கும்பாபிசேக விழா**

நாட்டுக்கோட்டை நகரத்தார்களுக்குச் சொந்தமான நாசிக்-பஞ்சவடி அருள்மிகு கார்த்திக் சுவாமி என்ற தண்டாயுதபாணி சுவாமி திருக்கோவில் திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா பம்பாய் வாழ் நாட்டுக் கோட்டை நகரத்தார்கள் ஒத்துழைப்புடன் நிகழும் மங்களகரமான ஆங்கிரஸ ஆண்டு ஆவணித் திங்கள் 24-ம் நாள் (9–9–'92) புதன்கிழமை காலை 6-15க்கு மேல் 7–15 மணிக்குள் திருக்குட நன்னீராட்டுப் பெரு விழா நடைபெற உள்ளது.

இங்ஙனம்
**ஸ்ரீ காசி நாட்டுக்கோட்டை நகரச் சத்திரம்**
மேலாண்மைக் கழகம்.

---

**இலவசப் பயிற்சி**
**(உதவித் தொகையுடன்)**

ஸ்க்ரீன் பிரிண்டிங் தொழில் இலவசமாக கற்றுத் தரப்படும். மாதம் ஒன்றுக்கு உதவித் தொகை ரூ. 300/- வழங்கப்படும். அடிப்படைக் கல்வித் தகுதி 8ம் வகுப்பு.

ஆண், பெண் இருபாலரும் விண்ணப்பிக்கலாம்.

விவரங்கட்கு:–
**நகரத்தார் இதழ்**
5, யானைக்காரச் சந்து
மீனாட்சி அம்மன் கோவில் தெரு
மதுரை – 625 001.

---

**உதவித் தொகையுடன்**
**ஸ்கிரீன் பிரிண்டிங்**
**தொழில் கற்றுத் தரப்படும்**

# உன்னால் முடிந்ததைச் செய்

—கவியரசு கண்ணதாசன்

தொகுத்தவர் : இராசகுமாரி செந்தமிழன்

- உன்னால் முடிந்ததைச் செய். செய்யமுடிந்த ஒன்றைச் செய்ய விரும்பாதவன் சமுதாய விரோதி.

- பெரிய காரியம் செய்ய நினைத்தேன் முடியவில்லை என்று வருந்தி கொண்டிருக்காதே ''எவ்வளவு முடியுமோ அவ்வளவு செய்'' என்பது அதன் பொருளாகும்.

- பெட்டி நிறைய பணம் உள்ளது. பெட்டிச்சாவியும் செட்டியார் மடியில் இருக்கின்றது. கொட்டிய கண்ணீரோடு திருமண மாகாமல் கோதையர் சிலர் சிரமப்படுகின்றார்கள். இவர் கொஞ்சம் பெட்டியைத் திறந்தால் இறைவன் அவர்களுக்கு சொர்க்க வாசலைத் திறப்பான். இவரால் முடியும். ஆனால் முடிய வில்லை இந்து தர்மத்தில் இவருக்குரிய தண்டனை என்ன? வாழ்க்கையை ஓரளவுக்காவது அனுபவிக்க விரும்பியவர்களுக்கு அதனை மறுத்தாரல்லவா? ஆதலால் இவர் எதையும் அனுபவிக்க முடியாமல் போய்விடும்.

- 'அறம் செய்ய விரும்பு' என்கிறார் ஔவை மூதாட்டி.
  'செய்' என்று அவர் ஆணையிட வில்லை, விரும்பு என்று தான் சொன்னார்.
  அவன் விரும்பினால் கூட போதும்; அதுவே கருணையின் பரப்பளவாகும்.

- முடிந்தால் செய் முடியாவிட்டால் விரும்பு.

- இறைக்கின்ற கேணி தான் ஊறும், கொடுக்கின்ற இடத்தில் தான் இறைவன் அருள் சுரக்கும்.

**புதுவயல் பற்றி கவியரசு கண்ணதாசனார்**

செய்யோடு காற்று விளையாடி வரும் நகரம்
திருமாது மனைகள் தோறும் திகழ்கின்ற நகரம்
பொய்யாது மழை பொழிய பொன் விளையும் நகரம்
புதுவயலில் வினைதீர்க்க போந்த கணபதியே !
நெய்யாகத் தேனாக பாலாக நிகழும்
நீராடி நல்லருளை நிகழ்த்தி வரும்கரியே !
கைலாச விநாயகனே கருணைபுரி கலையே !
கண்நிறைய உனை வைத்தோம் கவலையினி இல்லையே

## நாட்டுக்கோட்டை
## நகரத்தார் கட்டிடக் கலை

**சோழபுரம் சுப்பிரமணியன்**

நம்மவர் கலை உணர்வு மிக்கவர்கள். 'அதற்கு நமது' கட்டிடங்களே சான்றாகும். நகரத்தார்களின் வீடுகள் அனைத்தும் தெருத்தரையினின்றும் ஆறடி, ஏழடி உயரங்களில் பல படிக்கட்டுகளைக் கொண்டதாக உள்ளது. அன்றைக்கு சிமெண்ட் இல்லை. நீர்ச்சுண்ணாம்பும், உவரில்லாத ஆற்று மணலும் சேர்த்து அரைத்து செய்வதையே சாந்து என்கின்றோம். செங்கல்களை இணைத்து பின்பு சுவர் பூச்சுக்கு நமது முன்னோர்கள் பயன்படுத்திய பொருள்கள் நமது கட்டிடக் கலைக்கு கட்டிடத் தொழில் நுணுக்கத்திற்கு எடுத்துக்காட்டாக உள்ளது. ஆழமாக அமைக்கப்பட்ட வட்டமான குழிகளில் நீரையும் ஆற்று மணலையும் இரண்டுக்கு ஒன்றென சேர்த்துக் கொட்டி தண்ணீர் விட்டு செக்குச் சுற்றுவது போல் மீண்டும், மீண்டும் அறுபது சுற்றுகள் சுற்றியவுடன் வெண்ணெய் போல் சாந்து உருவாகும் வெண்ணெய் சாந்தை சுவரில் முதல் பூச்சாகத் தேய்ப்பார்கள். வெண் சாந்தில் தண்ணீர் வற்றி அதை துணியால் வடிகட்டி எடுத்து சுவரில் இரண்டாவதாகப் பூசித் தேய்ப்பார்கள். வெண்ணெய் சாந்துடன் சல்லிவெள்ளை கல்லைச் சேர்த்து மூன்றாவதாக தேய்ப்பார்கள். கடுக்காய், கருப்பட்டி ஆகிய இரண்டையும் இடித்து ஒரு துணியினால் கட்டி தண்ணீர் நிறைந்த பாத்திரத்தில் அமுக்கி வைத்து அந்த நீரை எடுத்து பூச்சுக்குமேல் இறைத்து நான்காவதாகத் தேய்ப்பார்கள். முட்டையிலுள்ள மஞ்சள் கருவை நீக்கிவிட்டு வெள்ளைத் தாருவில் இளநீர் சேர்த்து ஐந்தாவதாக தேய்ப்பார்கள். கண்ணாடி தோய்ப்புக்கல் கொண்டு தேய்ப்பார்கள். இந்த தேய்ப்பு நிறைவான தேய்ப்பு, கண்ணாடித்தேய்ப்பு எனப்படும். சில வீடுகளில் முட்டைக்குப் பதில் கிளிஞ்சலை அரைத்து அதில் இளநீரை சேர்த்து தேய்ப்பார்கள். நகரத்தார்கள் தங்கள் கட்டிடங்களின் அடித்தளக்கற்களுக்கு பூமிக்குமேல் எழுப்பு ஆறடி, சுவர்களுக்கு செம்பிரான் கல்லையே பயன்படுத்துவார்கள்.

(தொடரும்)

**ஆகசுட் இதழிலிருந்து**

**தஞ்சை பழ. வள்ளியப்பனின்**

**யுத்தகாண்டம் தொடர்கதை தொடங்குகின்றது**

## கல்வித்துறையில் நாம் என்ன செய்ய வேண்டும் ?

டாக்டர் கா. நாகப்பன்
துணைவேந்தர்—அழகப்பா பல்கலைக்கழகம்
காரைக்குடி.

[ சென்ற இதழ் தொடர்ச்சி ]

சிறுபான்மை இனத்தார் எவராயிருந்தாலும் 'தன் கையே தனக்கு உதவி' என்றபடி, கல்வித்துறையிலும் தமக்கு தேவையான உதவிகளைத் தாமே செய்துகொள்ள வேண்டும். எப்படி உதவி செய்வது? நம் உயர் கல்வித் தேவையை நம் ஓர் இனத்தாரால் மட்டுமே நிறைவேற்ற முடியுமா? முடியும் — முடியும் — முடியும்! மனமிருந்தால் மார்க்கமுண்டு. நம்முள், நாடு புகழும் கல்வியாளர்கள் உண்டு. உலகு புகழும் பொருளாதார வல்லுநர்கள் உண்டு. அந்நியச் செலாவணியை ஆண்டுதோறும் கோடிக்கணக்கில் தரும் தொழில் மேதைகள் உண்டு; ஆலை அதிபர்கள், மலைத்தோட்ட முதலாளிகள், நான்கு இலக்கச் சம்பளம் வாங்குபவர்கள் ஏராளம். நம்மவர்கள் அமெரிக்காவில் உளர்; ஆஸ்திரேலியாவில் உளர்; ஜப்பானில், ஜெர்மனியில், இலண்டனில், ஏன், உலகெங்கனும் உளர்.

நம்மினத்தவர்களில் எழுதப் படிக்கத் தெரியாதவர்களே இலர். நூற்றுக்கு நூறு எழுதப் படிக்கத் தெரிந்தவர் நம்மவர். உயர்கல்வி பெற்றவர்களின் எண்ணிக்கையும் ஓரளவு கணிசமானதே. நாம் சிறுபான்மையாக இருந்தாலும் நம் பொருளாதார வலிமை நாட்டின் பெரும்பான்மையான காரியங்களை நிறைவேற்ற உதவுகிறது.

கண்டனூரிலும், இராயவரத்திலும், அரிமலத்திலும் அண்மையில் நடந்தேறிய திருக்குட நன்னீராட்டு விழாக்களில் சொரியப்பட்டது கலச நன்னீர் மட்டுமன்று; நம் இனத்தவரின் உழைப்புத் தந்த பணமுமே. கண்டனூரில் மாதச் சம்பளம் வாங்குவோரின் பத்துச் சதவீத நன்கொடையே ஒன்றே முக்கால் இலட்சம் என்று கேள்விப்படுகிறேன். ஏறத்தாழ 650 குடும்பங்களில் உள்ள மாதச்சம்பளம் வாங்குவோரின் பத்து சதவீத நன்கொடையே இவ்வளவு என்றால், அவர்களின் மொத்த வருமா

[தொடரும்]

---

☐ எழுதி அனுப்பியவர் : மெ. முருகப்பன், கண்டனூர்